

# 17

# குறி

அதைத் திருவொற்றியூர் என்றுதான் நான் வெகுநாட்கள் நினைத்துக் கொண்டிருந்தேன். என்னை விசாரிப்பவர்களிடமும் அப்படித்தான் சொல்லிக் கொண்டிருந்தேன். ஆனால் அது காலடிப்பேட்டை என்பது ராமானுஜத்தினால்தான் எனக்குத் தெரியவந்தது. அவர் பாவம் தன் மனைவியை அழைத்துக் கொண்டு திருவொற்றியூர் போய் அங்கு நிறைய நேரம் தேடி அலைந்த பிறகு வேர்த்து விருவிருக்க, அவருடைய பதட்டம் பல—மடங்காகப் பெருகியிருக்க, பிரச்னம் முடிவதற்குச் சிறிது முன்னால்தான் சரியான இடத்திற்கு வந்து சேர்ந்தார். நானும் அவர் போல பஸ்ஸை நம்பியவனானால் இடப்பெயர்களைத் தெரிந்து வைத்துக் கொண்டிருப்பேன். சைக்கிளிலேயே எங்கும் போய் வருகிறவர்களுக்கு அடையாளம்தான் காட்ட முடியும். எனக்கு ஏதோ ஒரு சாலையில் அரைமணி நேரம் சைக்கிள் மிதித்து இடது புறமாக ஒரு சந்தில் திரும்பி அந்த வீட்டுக்குப் போய்ப் பழக்கம். இன்னும் அந்தத் தெருப் பெயர் தெரியாது.

அம்மா என்றும் மாதாஜி என்றும் அழைக்கப்பட்ட அந்த அம்மாள் மற்ற நாட்களிலெல்லாம் சாதாரணப் பெண்மணி. மூன்று குழந்தைகள். படுத்த படுக்கையாக மாமனார் வருடக் கணக்கில் கிடக்கிறார். கணவன் அவனுடைய நல்ல வேலையை ஒரு ஸ்டிரைக்கில் கலந்து கொண்டு போக்கடித்து விட்டான். ஸ்டிரைக் முடிந்து மற்றவர்கள் வேலைக்குப் போனார்களோ என்னவோ, இவன் ஒரு முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை. வருடம் மூன்றாகிறது. அந்த அம்மாவின் பிரச்ன நாள் வரும் படியில்தான் குடும்பம் அந்த இரண்டு அறை ஒண்டுக்குடித் தனத்தில் நடந்து கொண்டிருக்கிறது. என்னை அங்கு அழைத்துப் போனவர் பிரச்னம் சலித்துப்போய்த்தான் வருவதை நிறுத்திக் கொண்டுவிட்டார். நான் மட்டும் தொடர்ந்து ஒவ்வொரு வியாழக் கிழமையும் போய்க் கொண்டிருந்தேன். பார்க்கப் போனால்



முதலில் பூஜை நைவேத்திய ஆராதனைக்கு ஆயத்தம் செய்வ தெல்லாம் என் பொறுப்பில் வந்தது. அந்த அம்மாள் ஈரத்துணி யுடன் தியானத்தில் அமர்ந்து கண்விழிகள் உள்ளேயிழுத்து உடல் விரைத்துப் போனவுடன் ஒரு பெரிய பலகையில் விபூதியைப் பரப்பி வைப்பேன். மாதாஜி அவர்கள் விபூதியில் எழுதுவார்கள். பிரச்னம் தொடங்கும்.

ராமானுஜன் என் அலுவலகத்தில் ஒரு மேலதிகாரி. அந்த நாளிலேயே அவருக்குச் சம்பளம் ஆயிரம் ரூபாய். ஆனால் பெரிய சம்சாரி. முதல் மூன்றும் பெண்கள், அப்புறம் இரு பிள்ளைகள். இறுதியாக இன்னொரு மகள். அவருடைய தகப்பனாருடன் ஒரு சகோதரனும் அவருடன்தான் இருந்தார்கள். ராமானுஜன் என்னிடமே அவ்வப்போது இருபது, முப்பது கைம்மாற்று வாங்கிக் கொள்வார்.

அந்த நாளில் எனக்கொரு பழக்கம். அலுவலகம் முடிந்த வுடன் என் வீட்டிற்குப் போகாமல் என் கண்ணில் கடைசியாகத் தென்பட்ட யாருடனாவது நடந்து சென்று அவர் வீட்டிற்குச் செல்வேன். அங்கிருந்து என் வீட்டிற்குத் திரும்புவேன். இப்படித் தான் பலமுறை ராமானுஜன் வீட்டிற்குச் சென்றிருக்கிறேன். ராமானுஜன் தெருவிலிருந்தே என்னைத் திருப்பி அனுப்பாதபடி வீட்டிற்குள் அழைத்து காபி டிபன் கொடுத்து ஒரு மணி நேரமாவது பேசி விட்டுத்தான் என்னை விடுவிப்பார். அவர் வீட்டிலுள்ளவர்கள் எல்லாரும் என்னை ஒருமையில்தான் அழைப்பார்கள்.

ராமானுஜத்தின் குழந்தைகள் எல்லாருமே மிகவும் அடக்க மானவர்கள். முக்கியமாக அவருடைய மூத்தப் பெண் ரங்க நாயகி மிகவும் நல்ல பெண். எப்போதும் சுடு சொல்லாகப் பொரிந்து தள்ளும் தாத்தாவிடம் கூட அவள் மிகவும் பணிவுடன் நடந்து கொள்வாள். எட்டாவது வகுப்புடனேயே அவளுடைய படிப்பை நிறுத்திவிட்டார்கள். அதன் பிறகு வீட்டு வேலை பெரும் பாலும் அவள் பொறுப்புத்தான். அந்த வீட்டில் அவள் ஒருத்திதான் என்னை என் பெயர் சொல்லி அழைக்கமாட்டாள். ராமானுஜத் துக்கு ஒரு வருத்தம். நான் மட்டும் அவர் ஜாதியில் பிறந்திருந்தால் என்றோ ரங்கநாயகியை எனக்குக் கல்யாணம் செய்து வைத்தி ருப்பேன் என்று அடிக்கடி கூறிப் பெருமூச்சு விடுவார். நான் கல்யாணப் பேச்சு வரும்போது மட்டும் ஆகாயத்தைப் பார்த்தபடி இருப்பேன்.

நான் ஆகாயத்தைப் பார்த்ததற்கு இன்னொரு காரணமும் உண்டு. என்னை ஒருவர் மாதாஜி வீட்டுக்கு அழைத்துச் செல்ல

நானாகக் கேட்குமுன் மாதாஜியே என்னை அழைத்து விபூதியில் வெகு வேகமாக எழுதினார். எனக்கு அப்போது அதெல்லாம் படிக்கப் பழக்கம் ஏற்படவில்லை. சம்சார சாகரத்தில் சிக்கிக் கொள்ளாதே என்பதுதான் மாதாஜி எனக்கு அளித்த முதல் உபதேசம். நான் உடனே மாதாஜியின் சிஷ்யனாகி விட்டேன். இமாலயப் பிரதேசத்திற்குச் சென்று கடும் குளிரிலும் பனியிலும் போர்வைக்குத் தேவையில்லாமல் ஆழ்ந்த தியானத்தில் அமர்ந்து விடுவது போல நான் கற்பனை செய்து கொள்வேன். அதற்குரிய கட்டளை சீக்கிரமே பிறப்பிக்கப்படும் என்று காத்திருந்தேன். அந்தக் கட்டத்திற்கு முன் கூட்டியே தயார் செய்து கொள்ளும் வண்ணம் நான் கதர் வேஷ்டியும் வெறும் கதர் ஜிப்பாவும் அணிந்து கொள்வேன். வேண்டுமென்றே மழையில் நனைவேன். பனி பெய்யும்போது வெட்டவெளியில் உட்கார்ந்து கொள்வேன். கண்ணை மூடிக்கொண்டு தலையில் எங்கோவொரு இடத்தி லிருந்து உதிக்கும் எண்ணங்களையும் ஒவ்வொன்றாகப் பிரித்து, கவனிக்கப் பழக்கிக் கொண்டேன். பல தருணங்களில் ரங்க நாயகியும் என் மனதின் முன் நிற்பாள். ஒரு சில சமயங்களில் சாதி என்ன, குலமென்ன, ரங்கநாயகியைக் கல்யாணம் செய்து கொள்கிறேன் என்று ராமானுஜத்திடம் சொல்லிவிடலாம் என்று தோன்றும். ஆனால் உடனே ஓர் இமாலயப் பனிக்குகை மனக் கண்முன் உருவாகும். ரங்கநாயகி மறைவாள்.

ராமானுஜன் வழக்கமாகவே ஒரு பதட்ட நிலையில் இருப்பார். ஆனால் அன்று இன்னும் அதிகமாக உபாதைப்படுபவர் போலத் தோன்றியது. நானும் அவருடன் அவர் வீட்டிற்குக் கிளம்பியபோது தனக்கு வேறு வேலை இருக்கிறது என்று சொல்லித் தனியாகப் போய்விட்டார்.

அடுத்த நாள் வியாழக்கிழமை. காலையில் மேக மூட்டமாக இருந்தது. என்னுடைய திராடகப் பயிற்சி சூரியனைக் காண முடியாததால் அவ்வளவு திருப்திகரமாக நடைபெறவில்லை. என் மனதும் ஏனோ மிகவும் அலை பாய்ந்து கொண்டிருந்தது. திடீரென்று வீட்டு வாசலில் ராமானுஜன் என்னைக் கூப்பிடுவது கேட்டது.

நான் ஓடிப்போய்ப் பார்த்தேன். ராமானுஜன் சிறிது நிலை குலைந்த தோற்றத்துடன் நின்று கொண்டிருந்தார்.

"என்ன சார்?" என்று கேட்டேன். இரு நாட்கள் முன்பு அவருடைய மனைவிக்கு மருந்து வாங்கவென்று முப்பது ரூபாய் என்னிடம் வாங்கியிருந்தார்.



"இன்னிக்கு அந்த அம்மா குறி சொல்வாங்க, இல்லையா?" என்று கேட்டார்.

எனக்கு உடனே பதில் சொல்லப் பிடிக்கவில்லை.

"சொல்லுப்பா. இன்னிக்கு வியாழக்கிழமைதானே. மாதாஜி சொல்வாங்க, இல்லையா?" என்று மீண்டும் கேட்டார்.

"உம்" என்றேன்.

"இன்னிக்கு என்னை அழைச்சிட்டுப் போகணும்."

பொதுவாக எதையும் பரிகசிக்காத ராமானுஜன் நான் மாதாஜி சிஷ்யனாக இருப்பது குறித்து ஓரிரு முறை கிண்டலாகப் பேசியிருக்கிறார்.

"நீங்க வாங்க."

"நீயே அழைச்சிட்டுப் போப்பா."

"இல்லை, நீங்க பாட்டுக்கு வாங்க. நான் கொஞ்சம் முன்னாலியே போயிடுவேன். நீங்க அனாவசியமாக் காத்திட்டி ருக்கணும்."

"இல்லை, பரவாயில்லை."

"அங்கே ஏழு மணிக்குத்தான் உள்ளே விடுவாங்க, சார்."

என் குரலில் தொனித்த கடுமை அவரைப் பணிய வைத்தது.

அன்று அவர் அலுவலகத்திற்கு வரவில்லை. நான் காலையில் அவரிடம் பேசிய கடுமைக்குச் சமாதானமாக ஒரு வார்த்தை சொல்லச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை.

நான் மாதாஜி வீட்டுக்கு ஆறு மணிக்குப் போய்ச் சேர்ந்து விட்டேன். அன்று மாதாஜி பரவச நிலை அடைந்து வந்திருந் தோரின் பிரச்னைகளுக்குப் பதில் சொல்ல ஆரம்பித்து வெகு நேரம் ஆகியும் ராமானுஜன் வராதது குறித்து எனக்குக் கவலை—யாக இருந்தது.

எட்டரை மணிக்கு ராமானுஜன் வந்து சேர்ந்தார். அவர் மட்டுமில்லை. அவருடைய மனைவியும் வந்திருந்தாள். இருவர் முகமும் பேயறைந்த மாதிரி இருந்தது. நான் சரியாக அடை யாளம் கூறாததால் எங்கெல்லாமோ தேடி அலைந்து விட்டு ஒரு மாதிரி வந்து சேர்ந்துவிட்டார்கள்.

அந்த வேளைக்கு அங்கு கூட்டம் மிகுதியாக இருந்தது. நான் சொன்னபடி ராமானுஜன் ஏழு மணிக்கே வந்திருந்தால் எட்டு

மணிக்கெல்லாம் திரும்பிப் போயிருக்கலாம். இப்போது இரவு பத்துப் பதினொன்று கூட ஆகும் என்று எனக்குத் தோன்றியது.

ஒன்பது மணியிருக்கும். திடீரென்று மாதாஜி பலகையில் எழுதினாள்: 'குடும்ப கௌரவத்திற்குப் பங்கம் வந்த தம்பதியைக் கூப்பிடு!'

நான் அச்செய்தியை உரக்கக் கூறிக் கூப்பிட்டேன். அங்கு குழுமியிருந்த இருபது முப்பது பேரும் அசையாமல் உட்கார்ந் திருந்தார்கள். நான் மீண்டும் கூப்பிட்டேன். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. மிகுந்த தயக்கத்துடனும் சங்கடத்துடனும் ராமானுஜனும் அவர் மனைவியும் எழுந்தார்கள். "இங்கே வந்து உக்காருங்க" என்று நான் அவர்களிடம் சொன்னபோது கூட என் அதிர்ச்சி தீரவில்லை.

மாதாஜி எழுதினாள். "கௌரவர்களின் வீழ்ச்சிக்குக் காரணம் என்ன?"

"என்ன? என்ன?" என்று இருமுறை ராமானுஜன் புரியாமல் கேட்டார். எனக்கும் புரியாததாகத்தான் இருந்தது. நான் கேள்வியை மீண்டும் கேட்டேன்.

"அவர்களுக்குக் கெட்ட சகவாசம். நல்லவங்க பேச்சைக் கேக்க மாட்டாங்க."

"துரோணரும் பீஷ்மரும் கெட்ட சகவாசமா?" மாதாஜி எழுதினாள்.

"அவுங்க நல்லவங்கதான்."

"நல்லவர்கள்கூட இருந்தும் அவர்கள் கெட்டதற்குக் காரணம் என்ன?"

"தலையெழுத்துத்தான்."

"விதியை மதியால் வெல்ல முடியாதா?"

"என்ன? என்ன?"

"விதியை மதியால் வெல்ல முடியாதா?"

"தெரியலீங்களே?"

"எல்லாமே விதி என்றால் நாம் எதற்குக் கவலைப்பட வேண்டும்?"

ராமானுஜன் பதில் சொல்லாமல் இருந்தார்.



"மதி மட்டும் போதாது. முயற்சியும் இருக்க வேண்டு மல்லவா?"

"ஆமாம், தாயே."

"நீ முயற்சி செய்து பார்த்தாயா?"

"ஆமாம், தாயே. எங்கேயெல்லாம் போய்த் தேடினேன். இந்த இரண்டு நாளா ஊரெல்லாம் அலைஞ்சிண்டிருக்கேன், தாயே!"

ராமானுஜத்தை அவர் மனைவி சங்கடத்தோடு பார்த்தாள். சுமார் முப்பது ஜதைக் கண்களும் காதுகளும் அவர்களையே கவனித்த வண்ணம் இருந்தன.

ராமானுஜன் என்னிடம் மெதுவாக, "இவுங்ககிட்டே தனியாப் பேசமுடியாதா?" என்று கேட்டார்.

"இல்லை, சார். இங்கே இந்த பீடத்திலிருந்துதான் எழுதுவாங்க."

நான் அவருக்குப் பதில் சொல்லிக் கொண்டிருந்த போது மாதாஜி எதையோ எழுதி விட்டாள். எழுதும்போது விரலைக் கவனியாததால் எனக்கும் ஒரு கணம் எழுதியது புரியவில்லை. மாதாஜி விபூதியைக் கலைத்துவிட்டு மீண்டும் எழுதினார். "உன் சம்சாரத்தை அருகில் வரச் சொல்."

ராமானுஜத்தின் மனைவி மாதாஜி முன்னால் உட்கார்ந்து கொண்டாள். மாதாஜி எழுதினார், "சாவித்திரி யமனிடம் கேட்ட முதல் வரம் என்ன?"

ராமானுஜத்தின் மனைவி விழித்தாள்.

"மாமியார் மாமனார் பார்வையைத் திரும்பக் கேட்டது அவளுடைய முதல் வரம்."

ராமானுஜத்தின் மனைவி வேதனை மிகுந்து மாதாஜியை நமஸ்கரித்தாள்.

"எனக்கு வேண்டாம். கிருஷ்ண பரமாத்மாவை நமஸ்காரம் செய்."

"எனக்குத் தெய்வத்தைத் தவிர வேறே கதியில்லை."

"இன்றைக்கு உன் பூஜை முடித்தாயா?"

"இல்லை, அம்மா. இரண்டு நாளா ஒண்ணுமே ஒழுங்காச் செய்ய முடியலை."

"திரௌபதி அட்சயபாத்திரத்தைக் கவிழ்த்து வைத்தபோது அதில் என்ன இருந்தது?"

"எனக்கு அதெல்லாம் தெரியாது, அம்மா. எனக்கு ஒண் ணுமே தெரியாது. ஒழுங்கா எழுதப் படிக்கக்கூடத் தெரியாது—"

"சபரி படித்தவளா?"

அந்த அம்மாள் விழித்தாள்.

"பதிபக்தி உயர்ந்ததா தெய்வ பக்தி உயர்ந்ததா?"

"நீ என்ன சொல்லறியோ அதைச் செய்யறேம்மா." இன்னும் சிறிது நேரத்தில் அந்த அம்மாள் பொங்கிப் பொங்கி அழுது விடுவாள் என்று தோன்றியது— அந்த அம்மாளைப் போல எனக்கும் ஒன்றுமே புரியவில்லை. திடீரென்று இதென்ன புராண இதிகாசங்கள் பரீட்சை? மாதாஜி ராமானுஜத்தின் மனைவி யிடம் கேட்ட கேள்விகளை என்னிடம் கேட்டிருந்தால்கூட நானும் அவளைப் போலவே விழித்திருப்பேன்.

மாதாஜி எழுதினாள். நானும் அதை உரக்கப் படித்தேன். "உன் பெண் குளித்தாளா?"

மூச்சு விடும் சப்தம் கூடக் கேட்டுவிடும் நிசப்தம்.

மாதாஜி மீண்டும் எழுதிக் கேட்டாள். "உன் பெண் குளித்தாளா?"

ராமானுஜத்தின் மனைவி குபீரென்று துக்கம் வெடித்து அலறினாள். "அம்மா! தாயே! அவளைத்தாம்மா இரண்டு நாளாத் தேடிண்டு அலையறோம்! தாயே! என் வயிற்றில் பாலை வார்த்து விடும்மா! என் குழந்தையைக் காணும்மா! அவளுக்கு ஒண்ணும் ஆகாமக் காப்பாத்தும்மா!"

நானும் அங்கு கூடியிருந்த எல்லாரையும் போலப் பிர மித்திருந்தேன். யார்? எந்தக் குழந்தை?

மாதாஜி மீண்டும் எழுதினாள. "உன் பெண் குளித்தாளா?"

நான் ராமானுஜத்தின் மனைவியிடம் மெதுவாகக் கேட்டேன், "உங்க பெண் குளித்தாளான்னு கேக்கறாங்க."

ராமானுஜத்தின் மனைவிக்கு வேதனையுடன் பெரும் கூச்சமும் ஏற்பட்டது தெரிந்தது. எனக்கும் அந்தக் கேள்வியின் முழு அர்த்தமும் தெரிந்திருந்தால் நானும் மிகவும் கூச்சப் பட்டிருப்பேன்.



புருஷனும் மனைவியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். ராமானுஜத்தின் மனைவி ஏதோ கணக்குப் பார்த்து, "ஆச்சு" என்றாள்.

மாதாஜி எழுதினாள், "எப்போது?"

"போன வெள்ளிக்கிழமைக்கு முந்தின வெள்ளிக்கிழமை. பதினைந்து நாளாகிறது."

மாதாஜி எழுதினாள், "இல்லை."

"நீ சொல்றது புரியலையே, தாயே?"

"உன் பெண் குளிக்கவில்லை. அதனால்தான் காண வில்லை."

ராமானுஜத்தின் மனைவி பயங்கரமாகக் கூக்குரலிட்டாள். அப்படியே மூர்ச்சித்து விட்டாள்.

நான் என் பணியையும் மறந்து அவளைத் தூக்கினேன். நானும் ராமானுஜமுமாக அவளைப் பிடித்து ஒரு சுவரோரமாக உட்கார வைத்தோம். அவளும் சிறிது சுயநினைவு பெற்றவளானாள். அங்கு அவ்வளவு பேர் கூட்டம் கூடியிராவிட்டால் அவள் அழுது புலம்பிருப்பாள். நான் ராமானுஜத்தைக் கேட்டேன், "யாருங்க காணாம போனது?"

ராமானுஜன் தாங்கொணாத துக்கத்துடன், "ரங்கநாயகி தாம்ப்பா," என்றார்.

"எங்கிட்டே சொல்லவேயில்லியே, சார்?"

"இதெல்லாம் எப்படிப்பா எல்லார்கிட்டேயும் சொல்லறது?"

நான் மீண்டும் மாதாஜி பக்கத்தில் உட்கார்ந்து கொண் டேன். நானே தழைத்த குரலில் அவளைக் கேட்டேன், "அம்மா இவுங்க எனக்கு ரொம்ப வேணுங்கப்பட்டவங்க. அந்தப் பொண் ணையும் எனக்கு நன்னாத் தெரியும். நீ ஒண்ணும் தப்பாச் சொல்லிடாதே, அம்மா."

மாதாஜி விபூதியில் எழுதினாள். "அவள் திரும்பி வந்து விடுவாள். ஆனால் அவளை இமிசை செய்யக்கூடாது என்று சொல்."

நான் தொடர்ந்து கேட்டேன், "எப்போ வருவாம்மா? எப்போ வருமாம்மா? எங்கேயிருக்கா இப்போ?"

மாதாஜி இதற்குப் பதில் சொல்லவில்லை. விபூதியில் எழுதினாள்: "சொத்து விஷயமா கேட்க வந்த பெரியவரைக் கூப்பிடு!"

ஒரு வண்டி வைத்துக்கொண்டு ராமானுஜன் அவருடைய மனைவியை அழைத்துப் போனார். நான்தான் என்னிடமிருந்து பத்து ரூபாயைக் கொடுத்தேன்.

நான்கைந்து நாட்கள் கழித்துத்தான் அவர் அலுவலகம் வந்தார். நான் கேட்கவில்லை. அவராகவே சொன்னார், "ரங்க நாயகி திரும்பி வந்தாச்சு" இரு மாதங்களுக்குள் உறவில் ஒரு பையனைத் தேடிப் பிடித்து அவளுக்குக் கல்யாணமும் திருப்பதி யில் செய்து வைத்தார். என்னை மட்டுமில்லை, யாரையுமே அவர் கல்யாணத்திற்கு அழைக்கவில்லை. சில ஆண்டுகள் கழித்து ரங்க—நாயகியை ஒரு கோயிலில்தான் பார்த்தேன். அவளுடைய கணவனுடன் ஒரு குழந்தையும் இருந்தது. அவர்கள் எல்லாரும் சந்தோஷமாக இருந்ததாகவே தோன்றியது.

ரங்கநாயகி நல்ல பெண். தவறாக ஏதும் செய்திருக்க மாட்டாள்.

நான் மாதாஜி வீட்டுக்குப் போவதை நிறுத்திக்கொண்டேன்.

1983